# கங்கை கீதை கடவுள்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# கங்கை கீதை கடவுள்

இயற்றியவர் :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. R. வரதராஜன், B.A., B.T.

சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு







தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1987 [ ரூ. 2-00

SIVANANDA CENTENARY PUBLICATION



* O *

Translation of

# GANGA, GITA & GOD

[ From 'BLISS DIVINE' ]

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of* :

SRI. A. P. VENKATACHALAPATHY &

Smt. VALLIBAI AMMAL

BANGALORE – 46.

Printed at The Literary Press, Salem - 636 001.

3

# கங்கை, கீதை, கடவுள்

## கங்கை

கங்கை இந்தியாவிலுள்ள நதிகளுள் மிகவும் புனிதமானது. அதன் தோற்றம் தெய்வீகப் புகழ் கொண்டதாகக் கருதப்படுகிறது. ''நதிகளுள் நான் கங்கை'' என்று கண்ணபிரான் கீதையில் கூறுகிறார்.

இந்து ஒருவனுக்கு ''கங்கை'' என்று சொன்னவுடன் அதனோடு தொடர்புள்ள பல புனிதமான விஷயங்கள் மனதில் தோன்றுகின்றன. கங்கையில் ஒருமுறையாவது மூழ்கி நீராட வேண்டுமென்றும், இறக்கும் தறுவாயில் ஒருதுளி கங்கை நீராவது பருக வேண்டுமென்றும் ஒவ்வொரு ஹிந்துவும் விரும்புகிறான். சாதகர்களும், துறவிகளும் கங்கைக்கரையில் குடில்களை அமைத்துக் கொண்டு, தவம் செய்வதிலும், தியானம் செய்வதிலும் ஈடுபடுகிறார்கள். பீஷ்மர் அம்புப் படுக்கையிலிருந்து கொண்டு தன் உயிர் பிரியுமுன் பாண்டவர்களுக்குச் சொன்ன இறுதி அறிவுரைகளில் கங்கை நதியின் புகழைப் பற்றி மிகவும் சிறப்பாகச் சொல்கிறார்.

சத்திய யுகத்தில் அனைத்து இடங்களும் புனிதமானவையாக இருந்தன. திரேதா யுகத்தில் 'புஷ்கரம்' என்னுமிடம் மிகவும் புனிதமாக கருதப் பட்டது. துவாபர யுகத்தில் 'குருக்ஷேத்திரம்' மிகவும் புனிதமான இடமாக எண்ணப்பட்டது. கலியுகத்தில் கங்கை நதிக்கு அந்தப் புகழ் கிட்டியுள்ளது. ''கங்கை நதியிலிருந்து பல நூறு மைல்களுக்கப்பால் இருக்கும் ஒருவன் கூட கங்கையின் பெயரை உச்சரிப்பதால் தன்னுடைய பாவங்களிலிருந்து விடுபட்டு, பகவான் ஹரியின் இருப்பிடத்தை அடைகிறான்'', என்று தேவி பாகவதம் கூறுகிறது.

*கங்கையில் நீராடுதல் :*

ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான மக்கள் ஹரித்துவார், ரிஷிகேசம் ஆகிய இடங்களுக்குச் சென்று கங்கையில் நீராடுகிறார்கள். அன்னை கங்கையின் சிறப்பில் அவர்களுக்கு அளவு கடந்த நம்பிக்கை இருக்கிறது. கங்கை நதியின் புனித நீரில் மூழ்கி எழுவதால் தாம் செய்த பாவங்களெல்லாம் நீங்குகின்றன என்று அவர்கள் நம்புகிறார்கள். உண்மையில் பாவங்கள் அவர்களை விட்டு நீங்குகின்றன. கங்கையில் ஒருமுறை மூழ்கி எழுந்தவுடனேயே அவர்கள் தூய்மை பெறுகிறார்கள். அதைக் குறித்து எவ்வித ஐயமும் இல்லை. கடவுள் நம்பிக்கையற்றவர்களும், பகுத்தறிவுவாதிகளும் கூட கங்கையில் நீராடிப் புத்துணர்ச்சி பெறுவதற்காக வருகிறார்கள்.

தெய்வ நம்பிக்கையுள்ள இந்து ஒருவன் எங்கு நீராடச் சென்றாலும் கங்கையை எண்ணி வணங்கி அந்த நீரில் எழுந்தருளி இருப்பதாகக் கருதி, பின்னர் அந்த நதியில் நீராடுகிறான். கங்கை நதியிலிருந்து வெகு தூரத்தில் வாழும் ஒருவன், தான் அந்தப் புனித நதியில் நீராடிப் பெரும் பேறு பெறும் நாளை எண்ணி ஏங்குகிறான். அம்மாதிரி கங்கை நதியில் நீராடும் பெரும் பேறு கிட்டியவுடன் சிறிதளவு கங்கை நீரை ஒரு பாத்திரத்தில் தன்னுடன் எடுத்துச் சென்று வீட்டில் வைத்துக் கொண்டு வீட்டைத் தூய்மைப்படுத்த நேரும் போதெல்லாம் அதைப் பயன்படுத்துகிறான்.

*கங்கை — மிகவுயர்ந்த தன்மை வாய்ந்தது:*

கங்கை மகாவிஷ்ணுவின் அம்சமாகும். அது பரம்பொருளினின்றும் வெளிப்பட்டது. அதைக் காணும்போதே உள்ளம் கிளர்ந்தெழுந்து ஓங்கி

நிற்கும். அது இமவானின் மகளான பார்வதிக்கு அருகில் வாழ்ந்து கொண்டு, பள்ளத்தாக்குகளில் பாய்ந்து ஓடுகிறது. அது ரிஷிகேசத்தின் பள்ளத் தாக்குகளில் பாய்ந்து வரும்போது எவ்வளவு கம்பீரத்துடன் காணப்படுகிறது! அது கடலைப் போன்ற நீலநிறம் படைத்ததாக இருக்கின்றது. அதன் நீர் தெளிவாகவும், இனிய சுவையுடனுமிருக் கிறது. கீழே சம வெளிகளில் வாழும் செல்வந் தர்கள் ரிஷிகேசத்திலிருந்து கங்கை நீரை கொண்டு செல்கிறார்கள். இந்தியாவிலுள்ள தூரமான இடங்களுக்குக் கூட அங்கிருந்து பெரிய தாமிரப் பாத்திரங்களில் கங்கை நீர் எடுத்துச் செல்லப் படுகிறது.

ரிஷிகேசத்தில் பாயும் கங்கையைப் பார்க்கும் போது உள்ளம் கிளர்ச்சி அடைகிறது. கங்கைக் கரையிலுள்ள ஒரு சிறு பாறையின்மீது சில நிமிட நேரம் அமர்ந்திருப்பது பெரும்பேறாகும். ரிஷிகேசத்தில் கங்கைக் கரையில் சில மாத காலம் தங்கியிருந்து அனுஷ்டானங்களும், புரஸ்சரணங் களும் கடைப்பிடிப்பதால் சாதகர்கள் பகவான் ஹரியின் இருப்பிடத்தை அடைவார்கள். வாழ் நாள் முழுவதும் கங்கைக்கரையில் தங்கி தியானத்தில் ஈடுபடுவது சிவானந்தமாகும்.

அன்னை கங்கை, அவள் அருளை வேண்டுபவர் களுக்கு கண்ணுக்குத் தோன்றுவதும், தோன்றாதது மான பல்வகை ஆற்றல்களை அளிக்கின்றது. கங்கைக் கரையில் தனிமையில் அமர்ந்து, மனதை ஒருமைப்படுத்தித் தியானத்தில் ஈடுபடு. அப்போது உன் குற்றமுள்ள மனசாட்சியையும் மீறி வெற்றி கொண்டு ஆன்மீக அலைகள் உன் உள்ளத்தினுள்ளே துரிதமாக இயங்குவதை உணர்வாய். இம்மாதிரி உனக்குள்ளே நிரம்பித்ததும்பும் மேலான ஆனந்த

வெள்ளம் திடீரென்று எங்கிருந்து தோன்றியது? உன் மனத்தையும் உணர்வையும் இந்த பூதவுலகிலிருந்து வெளியே விரைவில் இழுத்துக்கொண்டு அழியாத அமரநிலைக்கு ஆட்படுத்திப் பேரின்பத்தையும் பேரருளையும் விளைவிப்பது எவ்வளவு விந்தையாக இருக்கிறது!

கங்கை நீரின் தூயதன்மை :

கங்கையில் பாயும் நீர் மிகவும் தூய்மையானதும், அழுக்குகளைப் போக்குவதுமாகும். அதில் எவ்விதமான கிருமியும் உயிர்வாழ முடியாது; இந்த உண்மை ஆய்வுக் கூடங்களில் பல விஞ்ஞானிகளால் சோதித்துப்பார்க்கப்பட்டுள்ளது. உலோகச் சத்துள்ள உப்புக்கள் நிறைந்துள்ளதால், கங்கை நீர் அநேகமாக எல்லாவகையான நோய்களையும் தீர்க்கின்றது.

கங்கைநீரில் நோய்க்கிருமிகளைக் கொல்லக் கூடிய உப்புச்சத்துக்கள் நிறைந்துள்ளன. மேலை நாடுகளில்கூட தோல் சம்பந்தமான நோய்களைப் போக்க உடலின் மேலே தேய்ப்பதற்காக கங்கை நீரைப் பயன்படுத்துமாறு நோயாளிகளுக்கு ஆலோசனை கூறுகிறார்கள். கங்கை ஒரு சாதாரண ஆறு மட்டும் அல்ல. அது ஒரு புனித தீர்த்தம். உலகத்தில் உள்ள வேறு எந்த ஆற்று நீருக்கும் இல்லாத விந்தையான ஆற்றல்கள் அந்த நீருக்கு உண்டு. கங்கை நீரின் ஆற்றலை விஞ்ஞானிகளும் ஒத்துக்கொண்டுள்ளார்கள்.

கனடா நாட்டிலுள்ள மெக்கில் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் F. C. ஹாரிசன் என்பவர் பின் வருமாறு கூறியுள்ளார்: ''கங்கை நீரில் காலரா வியாதிக் கிருமிகள் மூன்றிலிருந்து

ஐந்து மணி நேரத்திற்குள் விரைவில் இறந்துவிடும் விந்தையான உண்மைக் காரணம் யாராலும் தெளிவாக விளக்க முடியவில்லே. அங்குள்ள மக்கள் பெரும்பாலோரின் சவங்கள் காலரா நோயிஞல் இறந்தவர்களின் சவங்கள்கூட அதில் எறியப்படுவதையும், அந்த நதியில் ஆயிரக்கணக்கானவர்கள் நீராடுவதையும் எண்ணிப்பார்க்கும்போது, ''கங்கை நதியின் நீர் மிகவும் தூய்மையானது அதைப் பாழ்படுத்த முடியாது, அந்த நீரை எவ்வித பயமுமின்றி குடிக்கலாம், அதில் நீராடலாம்'' என்று இந்துக்களுடைய வியக்கத்தக்க நம்பிக்கையை நவீனகால உயிர்நூல் விஞ்ஞானிகள் தாம் தம் ஆராய்ச்சிகளின்மூலம் உறுதிப்படுத்த வேண்டும்''.

பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த பிரபல பௌதிக அறிஞரான Dr. D. ஹெல் என்பவர் கங்கை நீரின் வியத்தகு ஆற்றலேப் பற்றிப் பலவிதமான சோதனேகள் செய்து பார்த்துள்ளார். கங்கை நீரில் மிதந்து கொண்டிருந்த காலரா, சீதபேதி ஆகிய நோய்களால் இறந்தவர்களின் சவங்களுக்குக் கீழே சில அடி தூரத்தில் நோய்க் கிருமிகள் இருக்கும் என்று எதிர்பார்த்தபோது, ஒரு கிருமிகூட காணப்படாததைக் கண்டு மிகவும் வியப்படைந்தார். அந்த நோய்களால் பாதிக்கப்பட்ட நோயாளிகளிடமிருந்து நோய்க்கிருமிகளேப் பிரித்தெடுத்து அவைகளே வளர்த்து, அவற்ருேடு கங்கை நீரைச் சேர்த்தபோது, அந்த கிருமிகள் முழுதும் அழிந்துவிட்டன.

பிரிட்டனேச் சேர்ந்த Dr. C. E. நெல்சன் FRCS என்பவர் வேருெரு வியத்தகு உண்மையை விளக்குகிருர். ''கல்கத்தாவிலிருந்து இங்கிலாந்து நாட்டுக்குச் செல்லும் கப்பல்கள் கங்கை நதியின்

சேறு கலந்த நீருள்ள முகத்துவாரமான ஹூக்ளி நதியிலுள்ள நீரை எடுத்துச் சென்றபோது, இங்கிலாந்து நாடு செல்லும் வரை அந்த நீர் கெடாமல் இருந்தது. அதற்கு மாறாக இங்கிலாந்திலிருந்து இந்திய நாட்டுக்கு வரும் கப்பல்கள் அங்கிருந்து கொண்டு வரும் நீர் கல்கத்தாவிற்கு ஒரு வார கால பயணம் முன்னதாகவேயுள்ள பம்பாய்த் துறைமுகத்தை அடைவதற்குள் கெட்டுப் போய்விடும். அவைகள் வழியிலுள்ள போர்ட் செயிட், சூயஸ், ஏடன் ஆகிய துறைமுகங்களில் புதிதாக நீரை எடுத்து வரவேண்டியிருக்கும்'' எனவே கங்கை நீர் மிகவும் புனிதமானது, என்றும் அதற்கு விந்தையான ஆற்றல் உண்டு என்றும் நம்புவதில் வியப்பில்லை.

கங்கை — ஒரு மௌனமான குரு:

கங்கை நதி இமயமலையிலுள்ள கங்கோத்ரி என்னுமிடத்தில் உற்பத்தியாகி, வழியில் பல்வேறு பட்ட தடைகளைச் சந்திக்க வேண்டியுள்ளது. ஆனால் அது தன் இறுதி இலட்சியமாகிய கடலைச் சென்று அடைகின்றது. அதுபோலவே சாதகன் ஒருவன் தன் ஆன்மீக நெறியில் கடினமாகத் தோன்றும் தடைகளைக் கண்டு அஞ்சி தன் முயற்சியைக் கை விட்டு விடக்கூடாது. அவன் தன்னுடைய யோகப் பயிற்சிகளில் அக்கறையோடிருந்தால், இறைவனுடைய அருளால், எல்லாவிதமான இடையூறுகளும், தடைகளும் நீங்கி, அவன் தன் இலட்சியத்தை அடைவான்.

கங்கை உனக்கு எப்பொழுதும் குளிர்ந்ததும், தூய்மையானதுமான நீரைத் தருகிறது. அதற்குப் பதிலாக உன்னிடமிருந்து அது எதையும் எதிர்ப்பார்ப்பதில்லை. சூரியன் எவ்விதமான கைம்மாறும்

கருதாமல் எல்லாவற்றின் மேலும் ஒளி வீசுகிறது. அவைகளிடமிருந்து நீ நீதிகளை அறிந்து கொள். எப்பொழுதும் பிறருக்குக் கொடுத்துக் கொண்டே இரு. பதிலுக்கு அவர்களிடமிருந்து எதையும் கேட்காதே. எதையும் எதிர்பாராதே, அவர்களிடமிருந்து போற்றுதல், பெருமை, பாராட்டுதல் எதையும் எதிர்பாராதே.

ஒரு அயோக்கியனும், சாதுவும் பேதமின்றி கங்கை நீரைக் குடிக்கலாம். சூரிய ஒளி ஒரு கொடியவன்மீதும், நல்லவன்மீதும் சமமாக வீசுகிறது. ஒரு மா மரம் தன்னைத் தண்ணீர் விட்டு வளர்க்கின்றவனுக்கும், தன் கிளைகளை வெட்டுகின்றவனுக்கும் தன் பழங்களைக் கொடுக்கின்றது. கங்கை நதியைப்போலவும், சூரியனைப்போலவும், மாமரத்தைப்போலவும் சமநோக்குடன் இருக்கக் கற்றுக்கொள்.

நான் கங்கையையும் இமயமலையையும் நேசிக்கிறேன். கங்கை என் தெய்வீக அன்னை. இமயமலை என் தெய்வீக தந்தை. அவைகள் எனக்கு உணர்வூட்டி வழிகாட்டுகின்றன. நான் கங்கையில் நீராடுகிறேன். கங்கையில் நீந்திக் களிக்கிறேன். கங்கையை வழிபடுகிறேன். கங்கையிலுள்ள மீன்களுக்கு உணவளிக்கிறேன். அன்னை கங்கைக்குத் தீபவொளி காட்டுகிறேன். கங்கையை பிரார்த்திக்கிறேன். கங்கைக்கு வணக்கங்கள் செலுத்துகிறேன். கங்கையின் புகழ் பாடுகின்றேன். கங்கையின் பெருமையையும் புகழையும் பற்றி எழுதுகிறேன்.

கங்கை என்னை ஊட்டிவளர்த்திருக்கின்றாள். எனக்கு ஆறுதல் கொடுத்திருக்கின்றாள். கங்கை எனக்கு உபநிடதங்களின் உண்மைகளை உபதேசித்து இருக்கிறாள்.

நண்பனே! கங்கையின் வழியைப் பின்பற்றி நட. தூய்மையுடனிரு. மற்றவர்களோடு இணக்கமாயிரு. பொறுமையைக் கைக்கொள். மன்னிக்கும் தன்மையுடனிரு. இனிமையாக நடந்துகொள். எல்லோரிடமும் அன்பு செலுத்து. உடலாலும், உள்ளத்தாலும், ஒழுக்கத்தாலும், ஆன்மாவாலும் நீ பெற்ற அனைத்தையும் மக்கள் அனைவருடனும் பங்கிட்டுக்கொள். கொடுக்கக் கொடுக்க உன்னிடம் வளரும். தன்னலமுள்ள நோக்கமில்லாமல் கொடு. அதற்கு மாறாக எதையும் எதிர்பாராதே. எல்லோரையும் தழுவிச் செல். சமநோக்குடன் இருக்கும் பண்பை வளர்த்துக் கொள்.

உயிர், ஒளி, அன்பு ஆகியவற்றை அளிக்கும் கங்கையின் புகழ் ஓங்குவதாக. கங்கையை நம்பிக்கையுடனும், பக்தியுடனும், தெய்வீகத்தன்மையுடனும் வணங்கு. தூய்மை, அன்பு, தன்னடக்கம் சமநோக்கு ஆகிய மலர்களால் அர்ச்சித்து வணங்கு. அன்னை கங்கையின் நாமங்களைப் பாடு. அன்னை கங்கையின் அருளால் பிரம்மத்தை அடைவாயாக. அன்னை கங்கை உங்கள் அனைவரையும் ஆசீர்வதிக்கட்டும். தன் கரையின்மேல் வாசம் செய்துகொண்டு யோகத்திலும் தவத்திலும் ஈடுபடுவதற்கு அன்னை கங்கை உங்களுக்கு உதவட்டும்!

---

# 11

## பகவத் கீதை

மகாத்மா காந்தியடிகள் ஒருமுறை இலண்டன் நகரிலுள்ள மிகப்பெரிய நூலகம் ஒன்றுக்குச் சென்றிருந்தார். ''அங்குள்ள புத்தகங்களுள் எந்தப் புத்தகம் மக்களால் அடிக்கடி அநேகமுறை வாங்கிப் படிக்கப்பட்டது?'' என்று அங்குள்ள நூலகரைக் கேட்டதற்கு, ''பகவத் கீதை,'' என்று அவர் பதில் சொன்னார். மிக உயர்ந்த பரிசும், மிகச் சிறந்த பெரும்பேறும், மிகவும் நுண்ணியதும் ஆனால் எல்லோருக்கும் நடைமுறைக்கேற்ற எளிய முறையில் இருக்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் அரிய பொக்கிஷத்தை இந்தியா உலகம் முழுவதிலு முள்ள மக்கள் அனைவருக்கும் வழங்கியுள்ளது. மேலை நாடுகளிலுள்ள சிந்தனையாளர்களும் தத்துவ ஞானிகளும் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக் கொண்டு பகவத் கீதையாகிய திருக்கோயிலுக்கு பக்தியுடன்கூடிய பாராட்டுரைகள் வழங்கியுள்ளார் கள். மேலை நாட்டு அறிஞராகிய வில்ஹெல்ம் பான் ஹம்போர்ட் என்பவர் ''உலகத்தில் மிகவும் ஆழ்ந்தவையும், மேலானதுமாகிய கருத்துக்கள் அமைந்ததாகப் படைக்கப்பட்டது பகவத்கீதை என்ற நூல்தான்'' என்று கூறுகிறார். அமெரிக்காவி லிருந்த பெரிய ஞானியாகிய எமர்சன் என்பவர் தம் மேஜையின் மேல் எப்பொழுதும் பகவத் கீதை யின் பிரதி ஒன்றை வைத்திருந்தார்.

கீதை தெய்வத்தின் குரல். அது புராதன ஞானத்தைப் பற்றிய பாட்டு. அது ஆன்மீகக் கலையைப்பற்றிய அரிய புத்தகம். அது என்றும் நிலைத்திருக்கும் புத்தகம். அது என்னுடைய வாழ்க்கையில் எப்பொழுதும் என்னைவிட்டுப் பிரியாமலிருக்கும் புத்தகம். அது உலக முழுவதற் குமான உபதேச நூலாகும்.

தெய்வீக கீதம் :

மகாபாரதத்தில் பீஷ்மபர்வத்தில் கண்ண பிரானுக்கும் அர்ச்சுனனுக்குமிடையே நடை பெற்ற உரையாடல்தான் பகவத் கீதை. அது எழுநூற்ளுன்று வடமொழிச் செய்யுட்களடங்கிய பதினெட்டு அத்தியாயங்களை உடையது. இந்தச் செய்யுட்கள் அல்லது ஸ்லோகங்களில் பலவிதமான மிக உயர்ந்த பொருள்களைப் பற்றிச் சுருக்கமாகவும் அடக்கமாகவும் கூறப்பட்டுள்ளது. குருக்ஷேத்திர மாகிய போர்க்களத்தின் நடுவில் அர்ச்சுனனுடன் நடத்திய சுவையானதும் அறிவுரைகளடங்கியது மான உரையாடலில், பகவான் கண்ணன் ஆழ்ந்த, நுணுக்கமான, உயரிய உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டாக்கும் ஆன்மீக உண்மைகளையும், யோகம், வேதாந்தம், பக்தி, கர்மா ஆகியவைகளைப் பற்றிய அபூர்வமான இரகசியங்களையும் அர்ச்சுனனுக்கு விளக்கமாகக் கூறுகிருர். கண்ணபிரானுல் சொல்லப் பட்ட அறிவுரைகள் அனைத்தும் பகவான் வியாச முனிவரால் இந்தப் பரந்த உலகத்திலுள்ள மக்கட் கூட்டத்தின் நன்மைக்காக ஸ்ரீமத் பகவத் கீதை அல்லது தெய்வீக கீதம் என்னும் தலைப்பின் கீழ் தொகுத்து எழுதப்பட்டுள்ளது.

இப்பொழுது பகவத் கீதைக்கு கணக்கி லடங்காத விளக்கவுரைகள் உள்ளன. ஒவ்வொரு சுலோகத்தைப்பற்றியும் ஒவ்வொரு பெரிய நூலாகவே எழுதிவிடலாம். ஸ்ரீ பால கங்காதர திலகர் எழுதிய "கீதா ரகசியம்" என்னும் விளக்கவுரையால் கர்மயோகத்தில் ஈடுபாடுள்ள வர்கள் பயனடையலாம். ஸ்ரீதரருடைய விளக்க வுரையைப் படிப்பதால் பக்திமார்க்கத்தில் ஈடுபடுப வர்கள் பயன்பெறுவார்கள். ஞானமார்க்கத்தைப் பின்பற்றுபவர்களுக்கு ஸ்ரீ சங்கரருடைய கீதை விளக்கவுரை பயன்தரும்.

நல்ல ஆசிரியர் ஒருவர் தேவை :

ஆழ்ந்த கருத்துக்களையும் அரிய தத்துவங்களையும் தனக்குள்ளே அடக்கியுள்ள பகவத் கீதையைத் தகுதியுள்ள பிரம்ம நிஷ்டரான ஆசான் ஒருவரிடம் மிகவும் நம்பிக்கையுடனும் மனம் ஒன்றுபட்ட பக்தியுடனும் தூய்மையுடனுமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் கீதையிலுள்ள உண்மைகள் உனக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல் எளிதில் விளங்கும். சுவாமி மதுசூதனரின் கீதை, சுவாமி சங்காரனந்தரின் கீதை, பகவான் சங்கரரின் கீதை, மற்றும் இறையுணர்வு பெற்ற ஞானிகளால் எழுதப்பட்ட நூல்கள் மிகவும் பயனுள்ளவையாக இருக்கும்.

பகவான் நம் மனத்தின் பல்வேறு நிலைகளைப் பற்றிப் பேசுகிறார். எனவே கீதையிலுள்ள சுலோகங்களின் சரியான பொருளைத் தெரிந்துகொள்ள விரும்பினால் ஒரு குருவின் உதவி தேவை. ஒரு ஆசிரியரின் உதவியில்லாமல் கீதையிலுள்ள செய்யுட்களின் பொருளை நன்கு அறிந்து கொள்ள முடியாது. இல்லாவிடில் உணவருந்திக் கொண்டிருந்தபோது தனக்கு ''சைந்தவம்'' தேவை என்று கேட்டபோது உப்பைக்கொண்டு வருவதற்குப்பதிலாக குதிரையைக் கொண்டுவந்து அவனுக்கு முன்னால் நிறுத்திய கதையைப் போன்றதாகிவிடும்.

அனைவருக்கும் பொதுவான மறைநூல் :

பகவத் கீதை வயது, இனம், மதம் ஆகிய வேறுபாடுகள் இன்றி மக்கள் அனைவருக்கும் உதவும் ஒரு உலகப் பொதுமறை நூலாகும். மனிதர்களின் ஒவ்வொரு செயலையையும் மனித வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையையும் பற்றிக் கூறி அதை

மேன்மையுறச் செய்யும் நூலாகும். அதனால்தான் உலக முழுவதிலுமுள்ள சிறந்த அறிஞர்கள் பலர் பகவத் கீதையைப் பற்றி புகழ்ந்து கூறியுள்ளார்கள்.

பகவத் கீதை யோகத்தைப் பற்றிக் கூறுகிறது. யோகம் என்பது கீழ்திசை நாடுகளுக்கு மட்டுமோ, மேலை நாடுகளுக்கு மட்டுமோ உரியதல்ல. உலகத்திலுள்ள மக்கட் கூட்டம் அனைத்துக்கும் பொதுவானது. யோகம் என்பது சரியான முறையில் வாழும் வாழ்க்கையைக் குறிக்கின்றது. ஒரு குறிப்பிட்ட மத நம்பிக்கை, தொன்றுதொட்டு வரும் பழக்கம், நிறம், தொழில், இனம் ஆகியவைகளைப் பற்றிய வேறுபாடுகள் அதில் சிறிதும் இல்லை.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் இந்து மதத்துக்குரிய கடவுள் மட்டுமல்ல. எல்லோருடைய உள்ளத்திலும் எவ்வித வேறுபாடின்றியும் நிலைபெற்றுள்ள சத்தியத்தின் உருவமே அவர். அவர் பகவத் கீதையை அர்ச்சுனனுக்கு மட்டும் உபதேசிக்கவில்லை. அவர் அர்ச்சுனனுக்குக்குச் சொல்லும் வாயிலாக உலகமுழுவதிலுமுள்ள மக்கள் அனைவருக்கும் உபதேசிக்கிறார். அர்ச்சுனனுக்கு ஏற்பட்ட நெருக்கடியான நிலைகள் மக்கள் அனைவருக்கும் ஏற்படுகின்றன. எல்லோருக்கும் பொதுவாக வாழ்க்கையாகிய கடினமான பிரச்சனைக்குரிய விடை பகவத் கீதையேயாகும்.

வாழ்க்கை என்பது ஒரு போராட்டம். அங்கே நன்மைக்கும் தீமைக்கும், தெய்வீக குணங்களுக்கும் அசுர குணங்களுக்கும், தூய்மைக்கும் காமத்துக்கும் இடைவிடாது போர் நடந்துகொண்டே இருக்கின்றது. உனக்குள்ளே இன்னும் மகாபாரதப் போர் நடந்துகொண்டே இருக்கிறது. அறியாமை என்பது திருதராஷ்டிரனைக் குறிக்கிறது. தனி

மனிதனின் ஆன்மா அர்ச்சுனன். உனக்குள்ளே உறையும் பரமாத்மாதான் கிருஷ்ணனாகிய தேர் ஓட்டி. உன்னுடைய உடல்தான் தேர். உன்னுடைய இந்திரியங்கள்தான் அந்தத் தேரில் கட்டப் பட்டுள்ள குதிரைகள். மனம், அகந்தை, புலன்கள், சம்ஸ்காரங்கள், வாசனைகள், வேட்கைகள், விருப்பு, வெறுப்புக்கள், காமம், பொறாமை, கர்வம், வெளிவேடம் ஆகியவை கொடிய எதிரிகள்.

ஒவ்வொருடைய மனிதனுக்குள்ளேயும் ஆன்மீக இயல்புக்கும் உலகியல் இயல்புக்கும் இடையே ஓயாமல் நடந்து கொண்டிருக்கும் இந்தப் போராட்டத்தின் தீர்வு அல்லது முடிவுதான் பகவத் கீதையில் சொல்லப்பட்டுள்ளது. இந்த நல்ல அறிவுரையைப் பெற்று இன்புறுவதற்கு எந்த மனிதனும் விலக்கில்லை. அது குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்தவருக்கு மட்டும் உரியதல்ல. அது பெரும் பாலும் நடைமுறைக் கேற்ற அறிவுரையாகும். சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருக்கும் அன்றாட உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் ஆண் பெண் இருபாலாருக்கும், உனக்கும், எனக்கும் நடை முறையில் பயன்படக்கூடிய செய்தி கீதையிலுள்ளது.

கீதை அன்றாட வாழ்க்கையையும் நல்லொழுக்கத் தையும் ஒழுங்குபடுத்த உதவும் நடைமுறைக்கேற்ற வழித்துணை.

கீதை ஒரு சொற்பொழிவோ அல்லது விரி வுரையோ அல்ல. அது ஒவ்வொரு பிரச்னைக்குரிய விடை அல்லது தீர்வாகும். மனிதனுடைய மிகவும் நெருக்கடியான பிரச்னையைத் தீர்க்கும் வழியைக் காட்டி, அவனுக்கு உற்சாகமும், நம்பிக்கையும்,

ஊக்கமும் ஆறுதலையும் கொடுக்கும் செய்தியை உள்ளடக்கி இருக்கிறது. அது மனிதனுடைய இயல்பை தெய்வீக மயமாக்கிக் கொள்ளுமாறு நேரடியாக விடுக்கும் அறிவுரையாகும்.

பகவத் கீதை உணர்ச்சியையும் உள்ளக்கிளர்ச்சியையும் ஒரே சமயத்தில் தூண்டும் தெய்வீக உபதேசமாகும். உலக வாழ்க்கையில் மனச் சோர்வை உண்டாக்கும் பிரச்னைகளை விளக்கமாக எடுத்துரைத்து, இருளும் மனச் சோர்வும் அவநம்பிக்கையும் நிறைந்த மனத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் நம்பிக்கையும் உறுதியுமாகிய ஒளிக்கற்றைகளைச் செலுத்தி, வாசகர்களின் உள்ளத்திலுள்ள பலவீனத்தைப் போக்கி வலிமையையும், அதைரியத்தைப் போக்கி தன்னுடைய அளவற்ற ஆற்றலிலும் அழியாத அமர இயல்பிலும் வலிவான நம்பிக்கையையும் விரைவில் உண்டாக்குகிறது.

ஒரு மனிதன் தன்னுடைய அமரத் தன்மையை உணர்ந்து தெளிவதற்காகத் தன் குடும்பத்தையும் நண்பர்களையும் துறந்து சமுதாயத்தை விட்டுத் தனிமையை நாடிச்சென்று, ஒரு துறவியாக மாற வேண்டியதில்லை என்ற நற்செய்தியை எடுத்துரைக்கின்றது. உலக வாழ்க்கைக்கும் உலகியல் செயல் முறைகளுக்கும் இடையில் இருந்துகொண்டே தெய்வீக வாழ்க்கையை அடைந்து அனுபவிக்கலாம் என்றும் கூறுகிறது. இவ்வாறு ஆனந்த நிலையில் ஒன்றுபடுவதற்கு எதிரான தடைகளெல்லாம் நமக்குள்ளேயே இருக்கின்றனவே தவிர வெளியில் எங்கும் இல்லை. இதுதான் இந்த ஒப்பற்ற, மிகவுயர்ந்த நூல் போதிக்கும் மையக் கருத்தாகும்.

உன்னுடைய அன்றாட வாழ்க்கையையும், ஒழுக்கத்தையும் நெறிப்படுத்த உதவும் நடைமுறை வழிகளையும் கீதை எடுத்துக் கூறுகின்றது. அதர்மத்தை எதிர்க்க வேண்டுமென்றும், இறை யுணர்வைப் பெறுவதற்கு உதவும் நற்பண்புகளை வளர்த்துக்கொள்ள வேண்டுமென்றும் சொல்கிறது. தியாகம், அன்பு, கடமை ஆகியவைதான் கீதை கூறும் செய்திகள். எல்லோரையும் நேசி. உன்னிடத்தில் உள்ளதை மற்றவர்களோடு பகிர்ந்துகொள். உன் கடமைகளைச் செய். அற்ப மான விருப்பு வெறுப்புக்களைக் கடந்து செயல்படு. தன்னலம், பேராசை, காமம் ஆகியவற்றைக் களைந்துவிட்டு, உன் உள்ளத்தின் வாயிலைத் திறந்துவை. அப்போது பரம்பொருளான இறைவன் அங்கே நுழைந்து வாசம் செய்வான். இவைதான் கீதை கூறும் நீதிகள்.

சாதாரண நிலையிலுள்ள எவரும் செய்ய முடியாத ஒரு செயலை செய்யவேண்டுமென்று கீதை சொல்லவில்லை. ''மிகப் பெரிய செயலை நீ செய்ய வேண்டுமென்பது என் விருப்பமல்ல. உன் பாவமும் (மனப்பான்மை) உள்ளமும்தான் எனக்கு வேண்டும். உனக்கு எளியது எது என்பது தெரிந்து அதைச் செய். அதை நான் நிறைவேற்றுகிறேன். ஏனெனில் அதை நிறைவேற்றுவது என் கையில் உள்ளது'' என்று இறைவன் கூறுகிறார். ஒரு மனிதன் விடுதலை அல்லது மோட்சத்தை அடை வதற்கு ஆக்க பூர்வமான உறுதியை அளிப்பதோடு, அவனை அச்சமற்றவனாகவும் கீதை செய்து விடுகிறது. இதில்தான் பகவத் கீதையின் ஒப்பற்ற தன்மை தெரிகின்றது.

**கீதையின் சீரான அமைப்பு :**

ஞானமார்க்கம், பக்தி மார்க்கம், கர்ம மார்க்கம் என்ற மூன்று நெறிகளாகிய தத்துவங்களை கீதை

எடுத்துரைக்கிறது. கீதையிலுள்ள உபதேசத்தின் படி இந்த மூன்று நெறிகளுக்குமிடையே எவ்விதக் குழப்பமுமில்லை. செயல், பக்தி, ஞானம் ஆகிய மூன்று தத்துவங்களையும் கீதை வியக்கத்தக்க முறையில் இணைத்துக் காட்டுகிறது.

அன்பு என்பது ஞானத்தை வெளிப்படையாகக் காட்டுவதாகும். ஞானம் என்பது அன்பின் சாரமாகும். சேவை அல்லது தொண்டு என்பது அன்பைச் செயல் வடிவமாகக் காட்டுவதாகும். அன்பு, ஞானம், சேவை என்ற மூன்றும் தெய்வீக வாழ்வை முழுமையாக அடைவதற்கு இன்றியமையாத தேவைகளாகும். இதயம், தலை, கை ஆகிய மூன்றும் ஒரே சீராக வளர்க்கப்பட வேண்டும். அப்போதுதான் நீ முழுவளர்ச்சியைப் பெறமுடியும்.

நீ சங்கரரின் தலையையும், புத்தரின் இதயத்தையும் ஜனகரின் கையையும் பெற்றிருக்க வேண்டும். உடலாகிய தேரின் குதிரைகளாகிய செயல், உணர்ச்சி, ஞானம் ஆகிய மூன்றும் ஒரே சீராக இணைந்து செயல்பட வேண்டும். அப்போதுதான் உடலாகிய தேர் நன்றாக இயங்கி, போய்ச் சேர வேண்டிய இடத்தை விரைவாகவும் எவ்வித ஆபத்து இன்றியும் அடையும்.

நீ உன் ஆத்மாவோடு ஒன்றுபட்டு இன்புறலாம். சோஹம் என்னும் கீதத்தை இசைக்கலாம். அப்போது தான் பரம்பொருளோடு ஒன்றுபட்டு இணைந்திருக்கலாம். அதன் பிறகு தான் ஆன்மாவின் மௌனக்குரலைக் கேட்டு, உனக்குள்ளே இசைத்துக் கொண்டிருக்கும் அதன் இனிய இசையை உன்னால் கேட்க முடியும்.

உபதேசமும் நடைமுறையில் பயிலுதலும் :

''மிகக் குறைந்த கால அளவிலே, போர்களத்தின் நடுவில் கீதையை எவ்வாறு அர்ச்சுனனுக்கு உபதேசித்திருக்க முடியும்? முடியாது,'' என்ற ஐயத்தை, சிறிதும் சிந்தித்துப் பார்க்கும் திறனில்லாத சிலர் எழுப்புகின்றனர். இது தவறான தாகும். இது அர்ச்சுனனுக்கு தெளிவு ஏற்பட்ட நிலையாகும். இறைவன் அர்ச்சுனனுக்கு யூகித்தறியும் ஞானமாகிய தெய்வீகப் பார்வையைக் கொடுத்தார். எல்லாமறிந்த, எல்லாம் வல்ல இறைவனால் எதையும் செய்ய முடியும். அவன் அருளால் ஊமையொருவன் சிறந்த பேச்சாளனாக வும், நொண்டியொருவன் மலையேறுவதில் சிறந்தவனாகவும் மாறமுடியும்.

இந்த ஒப்பற்ற நூலை நேசிப்பவர்களும் மதிப்பவர்களும் 'கீதா ஜெயந்தி' அல்லது பகவத் கீதை தோன்றிய நாளை மார்கழி மாத வளர்பிறையில் பதினொருவது நாளில் கொண்டாடுகிறார்கள். இந்த நல்ல நாளில் தான் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பகவான் கண்ணனால் அவருடைய சீடனான அர்ச்சுனனுக்கு பகவத்கீதை உபதேசிக்கப் பட்டது.

ஞானப் புதையல் :

வேதங்களிலிருந்து கடைந்தெடுத்த வெண்ணெய் போன்றது கீதை. அது உபநிடதங்களின் சாரம். அது மகா பாரதத்தின் மகுடத்திலுள்ள மணியாகும். இந்து மதத்தின் சான்றுகளான பிரஸ்தானத்ரயம் என்னும் மூன்று நூல்களில் ஒன்றாகும் பகவத் கீதை.

உன்னுடைய ஐயங்கள் அனைவற்றுக்கும் இதில் விடை காணலாம். இதை எவ்வளவுக்கு எவ்வளவு பக்தியுடனும் நம்பிக்கையுடனும் படிக்கின்றாயோ, அவ்வளவுக்கு ஆழ்ந்த அறிவும், கூர்ந்து நோக்கும் ஞானமும், தெளிவாகவும் சரியாகவும் சிந்திக்கும் ஆற்றலும் உனக்கு ஏற்படும். கேளுங்கள் கொடுக்கப் படும். தேடுங்கள் காணலாம், தட்டுங்கள், திறக்கப் படும். உலகியலிலும், தெய்வீக நிலையிலுள்ள ஞானம் முழுவதையும் ஒரேமுறையில் அடைவதற் குரிய வழி இதில் கூறப்பட்டுள்ளது.

இறைவன், கிருஷ்ண அவதாரத்தில், மிகவும் ஆழ்ந்த ஞானம் அடங்கியுள்ள பகவத் கீதையை வழங்கியுள்ளார். அதில் கூறப்படாத ஞானத்தின் வகையே கிடையாது. அதில் விவரிக்கப்படாத யோகத்தின் பிரிவே இல்லை. எனவே அது ''சர்வ சாஸ்திரமயீ கீதா'' என்று உண்மையில் கூறப்படு கிறது. அனைத்துக் கலைகள் சாஸ்திரங்கள், ஞானங் கள், அடங்கியது கீதை. அதன் சொல்தான் அனைவருக்கும் சட்டம்.

பரமஹம்சர்களும், வேட்கை மிகுந்த சாதகர் களும் விளையாடிக்களிப்பதற்குரிய மானசசரோவ ராகிய பொய்கை போன்றது பகவத் கீதை. அது சத்தியத்தை நாடுபவர்கள் மகிழ்ச்சியுடனும் எல்லை யற்ற இன்பத்துடனும் நீந்தி விளையாடும் பேரானந்தப் பெருங்கடலாகும். மந்திரக்கல்லினால், இரும்புத்துண்டின் ஒரு முனையைத் தொட்டால் அது முழுவதும் தங்கமாக மாறுவது போன்று கீதையின் ஒரு செய்யுளில் கூறியுள்ளபடி நீ நடப்பா யானால் நீ தெய்வீகத் தன்மை பெறுவதில் சிறிதும் ஐயமில்லை.

பகவத் கீதையை ஒரு புனிதமான மறை நூலாகக் கருதி வணங்கு. ஒவ்வொரு நாளும் அதில் ஒரு அத்தியாயத்தைப்படி. அதோடு நின்று விடாதே. கீதையின் உபதேசத்தின்படி நட. பேசுவதும் சொற்பொழிவாற்றுவதும் எவ்விதத்திலும் பயன்படாது. கீதை முழுவதும் மனப்பாடமாகத் தெரியலாம். மணிக்கணக்காக கீதையைபற்றிச் சொற்பொழிவாற்றலாம். இருப்பினும் கீதையில் உள்ள ஞானத்தைப்பற்றிச் சிறிதளவுகூட உனக்குத் தெரியாமல் இருக்கலாம். கீதையிலுள்ள அறிவுரைகளின்படி நடந்து கொள்வதுதான் தேவையானதாகும். தீவிரமாகச் செயல் முறையில் நடந்து காட்டு. கீதை உன்னுடைய எண்ணங்களுக்கு வழி காட்டட்டும்; கீதை உன்னுடைய சொல்லுக்குத் தூண்டுதலாக இருக்கட்டும்; கீதை உன்னுடைய செயல்களைக் கட்டுப்படுத்தட்டும். அப்போதுதான் வாழ்க்கையைப் பற்றிய உன்னுடைய எண்ணம் படிப்படியாக மாறுதலடையும். நீ தெய்வீக திருஷ்டியுள்ள தெய்வத்தன்மை பொருந்திய மனிதன் ஆவாய். அதன்பிறகு வெற்றி தோல்வி, இன்ப துன்பம், இலாப நஷ்டம் ஆகியவைகளைப்பற்றிக் கவலைப்படமாட்டாய். நீ மனவுறுதி வலிமை, அமைதி, பேரின்பம் ஆகியவற்றை இந்தப் பிறவியிலேயே நீ இருக்குமிடத்திலேயே அடைவது உறுதி.

---

## கடவுள்

கடவுள் என்ருல் யார்? அவர் எப்படி இருப்பார்? கடவுள் ஒருவர் இருக்கிருரா? அவர் எங்கிருக்கிருர்? கடவுளை அறிவது எப்படி? இந்த முடிவில்லாத கேள்விகளுக்கு எல்லாம் விடைகளை மனிதன் எதிர்பார்க்கிருன்? உண்மையில் கடவுள் இருக்கிருர். அவர்தான் நிலைத்திருக்கும் சத்தியமான ஒரே பொருள். அவர்தான் உன்னைப் படைத்தவர்; உன்னைக் காப்பவர்; உன்னைத் துன்பத்தினின்றும் மீட்பவர், அவர் எங்கும் நிறைந்தவர். அவர் உன் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிருர். அவர் எப்பொழுதும் உனக்கருகிலேயே இருக்கிருர். உன் கழுத்துக்கருகிலுள்ள முக்கிய இரத்தக் குழாயையும் உன் மூக்கையும்விட மிகவும் அருகிலிருக்கிருர். அவர் உன்னிடம் அன்புடனிருக்கிருர். அவரால் உன்னுடன் பேச முடியும். உன் அறிவின் உதவியால் அவரை அறிய முடியாது. உணர்வதாலும், தியானத்தாலும், அனுபவத்தாலும், உள்ளத்தெளிவினுலும் கடவுளை நீ அறியலாம்.

கடவுள் என்பவர் யார்:

பெட்ரோமாக்ஸ் விளக்கு வாய்விட்டுப் பேசுவதில்லை. ஆனுல் பிரகாசமாகஎரிந்து சுற்றிலும் ஒளியைப் பரப்புகின்றது. மல்லிகை மலர் பேசுவதில்லை. ஆனுல் அதன் மணம் எங்கும் பரவி நிற்கின்றது. கலங்கரை விளக்கம் முரசறைவதில்லை. ஆனுல் அதனுடைய பிரகாசமான ஒளி மாலுமிகளுக்கு நேசத்துடன் வழிகாட்டி உதவுகிறது. நம் கண்ணுக்குப் புலப்படாத இறைவன், தான் இருப்பதை தாளம் கொட்டி அறிவிப்பதில்லை.

ஆனால் விருப்பு வெறுப்பற்றவரும் உய்த்துணரக் கூடியவருமான ஒரு சாதுவால் கடவுளின் எங்கும் நிறைந்த தன்மையை உணர முடியும்.

பெயர்கள் உருவங்கள் அனைவற்றிற்கும் பின்னே பெயரும் உருவமுமில்லாத சத்தான ஒருவர் இருக்கிறார். ஆளுகின்றவர் அனைவருக்கும் பின்னே மேலான ஆளுநர் ஒருவர் இருக்கின்றார்.

ஒளிகள் அனைவற்றிற்கும் பின்னே சுடரொளி ஒன்று இருக்கின்றது. ஒலிகள் அனைவற்றிற்கும் பின்னே அமைதியான பரம்பொருள் இருக்கின்றது. ஆசிரியர்களுக்குப் பின்னே குருமார்களுக்கெல்லாம் பரமகுருவான ஒருவர் இருக்கிறார்.

அழியும் பொருள்களுக்குப் பின்னே அழியாத பரம்பொருள் ஒன்று இருக்கிறது. அசையும்பொருள் களுக்குப் பின்னே அசைவற்றதும் முடிவில்லாதது மான பொருள் ஒன்று இருக்கிறது. மணி, நிமிடம் ஆகிய கால வரையறைக்குப் பின்னே கால வரை யறையற்ற அமரநிலையிலுள்ள பொருள் ஒன்று இருக்கிறது. வெறுப்பு, கலவரம், போராட்டம் ஆகியவற்றின் பின்னே மறைந்துள்ள அன்பு ஒன்று இருக்கின்றது.

உயிருள்ளதும் உயிரற்றதும் உணர்வுள்ளதும் உணர்வற்றதுமான அனைத்துப் பொருள்களும் அடங்கிய தொகுப்பே கடவுளாகும். அவர் துன்பங்களுக்கும் எல்லைகளுக்கும் அப்பாற் பட்டவர். அவர் சர்வ வல்லமை பெற்றவர். எல்லாமறிந்தவர், எல்லா இடங்களிலும் நிறைந் தவர். அவர் முதலும், நடுவும், முடிவுமற்றவர் அவர் உயிர்கள் எல்லாவற்றின் உள்ளும் உறைகிறார். அவற்றின் உள்ளிருந்துகொண்டே அவற்றை அடக்கி ஆள்கிறார்.

கடவுளே எல்லாம் ஆவார். இந்தப் பிரபஞ்சத்தில் கடவுள்தான் நிலைபெற்ற உண்மையாகும். இறைவனுடைய மகிமையால்தான் எல்லாப் பொருள்களும் தோன்றியுள்ளன.

கடவுள் எக்காலத்திலும் இருக்கின்றார். எல்லாப் பொருள்களும் அவரைச் சார்ந்தே உள்ளன. ஆனால் எதையும் ஆதாரமாகக் கொண்டவரல்லர். அவர்தான் சத்தியம்.

கடவுள்தான் யோக சாதனைகள் அனைவற்றின் முடிவு அல்லது இலட்சியமாகும். உலகிலுள்ள அனைத்தும் பாடுபட்டு முன்னேறுவது அவரை அடைதற் பொருட்டே. உலகிலுள்ள மிகவுன்னத மான நன்மை அல்லது நோக்கம் இறைவன்தான்.

உனக்குப் பசியேற்பட்டால் அதைத் தணிப்ப பதற்கு உணவு இருக்கிறது. உனக்குத் தாக மேற்பட்டால், தணிப்பதற்கு நீர் இருக்கிறது. எப்பொழுதும் இன்பத்துடன் இருக்க வேண்டு மென்றால், அந்த வேட்கையை நிறைவேற்றுவதற்கு ஏதாவதொன்று இருக்க வேண்டுமல்லவா? அது தான் இன்பமே வடிவான இறைவன். இறைவன், அமரநிலை, விடுதலை, பக்குவ நிலை, அமைதி, பேரின்பம், அன்பு என்பவை எல்லாம் ஒரே பொருளுள்ள சொற்கள்.

கடவுள் என்பது என்ன?

கடவுள் என்பது என்ன? அதை விளக்கிச் சொல்வது கடினம். ஆனால் நான் கங்கை நதியைப் பார்க்கும்போது அதைக் கடவுளாக உணருகிறேன். மல்லிகை மலரைப் பார்க்கும்போது அதைக் கடவுளாக உணருகிறேன். நீலவானத்தைக் காணும்

போது, அதைக் கடவுளென உணருகிறேன். பறவைகளின் ஓசையைக் கேட்கும்போது, அதைக் கடவுளென உணருகிறேன். தேனைச் சுவைக்கும் போது, அதைக் கடவுள் என உணருகிறேன்.

அறிஞர்கள் பரம்பொருளைப் பற்றிப் பலவித மாக வருணித்துக் கூறிய போதிலும் அவை யெல்லாம் பரம் பொருளைப்பற்றிய உண்மையான விளக்கமல்ல. பரம்பொருள் என்பது வருணனை அல்லது விளக்கத்துக்கு எட்டாதது.

ஒவ்வொருவரும் தங்களுக்கேற்றமுறையில் கடவுளைப்பற்றிக் கற்பனை செய்து கொள்கிறார்கள். போர்வீரன் ஒருவன் கடவுள் தலைக்கவசம் அணிந் திருப்பதாக எண்ணிக் கொள்கிறான். சீனு தேசத் தைச் சேர்ந்தவனுடைய கடவுள் சப்பை மூக்கு உடையவராகவும் புகைப்பதற்குக் குழாயுடனும் இருப்பார். இந்து மதத்தைச் சார்ந்தவனுடைய கடவுள் நெற்றியில் மதச்சின்னங்களுடனும் மார்பில் ஜெபமாலையும் மலர் மாலையும் அணிந்த வராயும் இருப்பார். கிறிஸ்துவர்களின் கடவுள் மார்பில் சிலுவையை அணிந்திருப்பார். சிலருடைய கடவுளுக்குச் சிறகுகள் இருக்கும். ஓர் எருமை மாடு தன்னுடைய கடவுளைப் பெரிய எருமை மாடாகக் கருதி இருக்கும்.

எனவே அவரவர்கள் நிலைக்கும் வாழ்க்கைக்கும் ஏற்றபடி கடவுளுக்கு உருவங்களைக் கற்பனை செய்து கொள்ளுகிறார்கள். ஆனால் கடவுளின் உண்மையான இயல்பைப் பற்றி அறிவதே நமக் குரிய மிகப்பெரிதும் இன்றியமையாததுமாகிய செயலாகும். ஏனென்றால் கடவுளைப்பற்றிய

நம்பிக்கைதான் நம்முடைய வாழ்க்கை முழுவதற்கும் அடிப்படை ஆதாரமாக அமைகிறது.

கடவுள் என்று ஒருவர் இருக்கிருரா?

கடவுள் மனிதனின் கற்பனைத்திறத்துக்கு அப்பாற்பட்டவர். அவர் எப்பொழுதும் நிலைத்திருக்கும் சத்தியமானவர். பிரம்மம் என்பது தத்துவரீதமான கண்ணுக்குப் புலப்படாத ஒரு கற்பனை. ஆனுல் அது ஒரு முழுமையானதும் மிகவும் உண்மையானதுமாகும்.

கடவுளின் தோற்றத்தை அறிவியல் சோதனைகளால் நிருபிக்கமுடியாது. மிகச்சிறந்த அறிஞர்கள் கூட பரப்பிரம்மத்தைப்பற்றி விவரிக்க முடியாமற் குழப்பமடைகின்றனர். மிகச்சிறந்த அறிஞர்களின் அறிவுக்குக் கூட அது எட்டவில்லை. அது தூய உணர்வாகவும் அங்கே பகுத்தறிவும் நூலறிவும், மனிதனுடைய இயல்பு முழுவதுமே அழிந்துவிடுவதாகவும் அனுபவ பூர்வமாக உணரப்படுகிறது. அங்கே அனைத்தும் அழிந்து விடுகிறது; அனைத்தும் அங்குதான் தோன்றுகிறது.

ஆய்வுக் கூடங்களில் நடத்தப்பட்ட பரிசோதனைகள் தேவையா? மிகவும் விந்தையாக இருக்கிறது! எல்லையற்றதும், எங்கும் நிறைந்ததுமான பரம்பொருளை சோதனைக் குழாய், ஊது குழல், இரசாயனப் பொருள்கள் ஆகியவைகளுக்குள் அடைக்கப் பார்க்கிறீர்களா? கடவுள்தான் உங்கள் இரசாயனப் பொருள்கள் எல்லாவற்றுக்கும் ஆதாரமானவர். அணு, அணுத்தொகுப்பு, எலெக்ட்ரான் ஆகிய அனைத்தின் அடித்தளம் அவர்தான். அவரில்லாவிடில் அணுவும், எலெட்ரானும் அசையாது. அவர்தான் அவற்றின் உள்ளிருந்து செயலாற்றுபவர்.

நமது புலன்களுக்கும், மனதால் உணர்வதற்கும், அறிவால் காண்பதற்கும், கைகால்களின் வலிமைக்கும் ஆற்றல் அளிப்பவர் கடவுளேயாவார். நாம் பிறப்பதும், இறப்பதும் அவருடைய விருப்பப்படிதான். ஆனால் நடிப்பவனும் அதைப்பார்த்து ரசிப்பவனும் தானேதான் என்று மனிதன் வீணாக எண்ணிக்கொள்கிறான். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஆட்டிப்படைக்கும் சர்வ வல்லமை பொருந்திய இறைவனுக்கு முன்னால் மனிதன் எவ்வித ஆற்றலுமற்றவன்.

இறைவனின் திருவுள்ளம்தான் உலகெங்கும் விதியாக இயங்குகிறது. புவிஈர்ப்பு, பொருள்களின் செறிவு, காரணகாரியம், மின்சக்தி, இரசாயனம், பௌதிகம், மனோதத்துவம் ஆகியவற்றைப் பற்றிய எல்லா விதிகளும் இறைவனுடைய விருப்பப்படி நடைபெறுவனவேயாகும்.

இயற்கையின் நியதிக்குட்பட்ட அனைவற்றையும் நாம் காரணகாரிய தத்துவத்தின்படி விளக்குவதைப் போலவே இயற்கை முழுவதையுமே அந்தத் தத்துவத்திற்கிணங்க விளக்க வேண்டும். இயற்கையின் தோற்றத்துக்கு ஒரு காரணம் வேண்டும். அது இயற்கையினின்றும் வேறுபட்டிருக்க வேண்டும். அது இயற்கையின் ஆற்றலுக்கு மேம்பட்டதான ஒன்றுதான். அதைத்தான் இறைவன் என்று சொல்ல வேண்டும். இயற்கை என்பது பல செயல்களின் சேர்க்கை அல்ல; பலவிதமான செயல்கள் தாறுமாறாக அமைந்ததல்ல. இயற்கையில் நடைபெறும் செயல்கள் ஒரு நியதிக்குட்பட்டு சீராக நடைபெறுகின்றன. கோள்கள் தங்கள் பாதைகளில் சீராகச் சுழன்று வருகின்றன. விதைகளிலிருந்து மரங்கள் சீராக வளர்கின்றன. பருவங்கள் மாறாமல் ஒன்றையொன்று தொடர்ந்து

வருகின்றன. இயற்கை என்பது ஜடப்பொருள். (தன்னைத்தானே மாற்றி அமைத்துக்கொள்ள முடியாதது) அதனால் அதைவிட அறிவுள்ள பொருள் ஒன்று அதற்கு உதவவேண்டியுள்ளது அதற்குக் காரணமான உயர்ந்த பொருள்தான் கடவுள். ஐன்ஸ்டீன் என்ற சிறந்த விஞ்ஞானி கூட இந்த பிரபஞ்சம் உருவானதற்குக் காரணம் மிகச் சிறந்த பரம்பொருள் ஒன்று உண்டு என்ற உறுதியான நம்பிக்கையுடையவராயிருந்தார்.

பகல்நேரத்தில் விண்மீன்களைப் பார்க்க முடியாவிட்டால் அவைகள் இல்லையென்று கூற முடியாது. மேக மூட்டம் உள்ள நாளில் கதிரவனைப் பார்க்க முடியாவிட்டால்கூட, கதிரவன் இருக்கிறான். அவ்வாறே இந்த ஊனக் கண்களால் கடவுளை காணமுடியாவிட்டால் கூட கடவுள் ஒருவர் இருக்கிறார். தியானத்தின்மூலம் தெய்வீகப்பார்வை அல்லது உய்த்துணரும் ஆற்றலைப் பெறுவாயானால் நீ இறைவனைக் காண்பாய். இறைவன் இருக்கிறான் என்ற உண்மைக்கு எந்த நிருபணமும் தேவை இல்லை. ஏனென்றால் நிருபணம் எல்லாவற்றுக்கும் அடிப்படை ஆதாரம் இறைவன்தான்.

கடவுள் எங்கே இருக்கிறார்?

கடவுள் எங்கே இருக்கிறார்? கடவுள் இல்லாத இடமே இல்லை. மலர் மாலையிலுள்ள பூக்கள் அனைவற்றையும் கோர்க்கும் ஒரு நூலைப் போல உயிர்கள் அனைவற்றுள்ளும் ஒரே ஆத்மா ஊடுருவிச் சென்று இணைக்கிறது. எள்ளில் எண்ணெயைப் போலவும், பாலில் நெய்யைப்போலவும், மூளையில் மனதைப் போலவும், உடலில் உயிரைப்போலவும், கருவில் உயிரைப்போலவும், மேகத்தின்பின் மறைந்துள்ள கதிரவனைப்போலவும், விறகினில் தீயைப்போலவும்,

விண்வெளியிலுள்ள நீராவியைப்போலவும், நீரில் கரைந்துள்ள உப்பைப்போலவும், மலர்களிலுள்ள மணத்தைப்போலவும், இசைத்தட்டிலுள்ள ஒலியைப்போலவும், தாதுவிலுள்ள பொன்னைப் போலவும், இரத்தத்திலுள்ள உயிரணுக்களைப் போலவும், எல்லா உயிர்களிலும் இறைவன் மறைந்து வாசம் செய்கிறான்,

இறைவன் உயிர்கள் அனைவற்றிலும் உயிராகவும் உணர்வாகவும் உள்ளுறைகிறான். சிங்கத்தின் கர்ச்சனையிலும், பறவையின் பாட்டிலும், இளம் குழந்தையின் அழுகையிலும் இறைவன் இருக்கிறான். அவனுடைய தோற்றத்தை எல்லா இடங்களிலும் உணர்வாயாக.

வண்ணத்துப்பூச்சியின் சிறகுகளிலும், அகர வரிசை எழுத்துக்களிலும், ஒரு நோயாளியின் இருமலிலும், ஓடைநீரின் சலசலப்பிலும், மணியின் ஓசையிலும் இறைவனைக் காண்பாயாக. உலகத்திலுள்ள பொருள் ஒவ்வொன்றிலும் இறைவனின் விந்தையான திருமுகத்தைக் காண்க.

நீ விடும் ஒவ்வொரு மூச்சும், உன் உள்ளத்தின் ஒவ்வொரு துடிப்பும், உன் இரத்தக் குழாயில் உண்டாகும் ஒவ்வொரு நாடித் துடிப்பும், உன் மனத்தில் தோன்றும் ஒவ்வொரு எண்ணமும் கடவுள் உனக்கருகில் இருக்கிறார் என்று சொல்கிறது.

நறுமணம் வீசும் மலரும், உன்னைக்கவரும் ஒவ்வொரு கனியும், மெல்லிய காற்றும், அமைதியாகப் பாயும் ஆறும் இறைவன் கருணையை பாடிப் போற்றுகின்றன.

ஆற்றல்மிக்க அலைகளை வீசும் பெருங்கடலும், உறைபனியாறுகள் நிறைந்த உயர்ந்த இமய மலையும், பரந்த வானத்திலுள்ள சுடரொளிவீசும் கதிரவனும், விண்மீன்களும், பரந்த கிளைகளைக் கொண்ட உயர் மரங்களும், மலைகளிலும், பள்ளத் தாக்குகளிலும் பாயும் குளிர் நீரூற்றுகளும், இறை வனின் அளவுகடந்த ஆற்றலைப் பேசுகின்றன.

இன்னிசைக் கலைஞர்களின் இசையும், ஆற்றல் மிக்க பேச்சாளர்களின் சொற்களும், புகழ்மிக்க புலவர்களின் பாடல்களும், திறமைமிக்க விஞ்ஞானி களின் கண்டுபிடிப்புகளும், வல்லுநர்களான மருத்துவர்களின் அறுவைச் சிகிச்சைகளும், புனித மிக்க ஞானிகளின் அறிவுரைகளும், பகவத் கீதை யிலுள்ள சிந்தனைகளும், உபநிடத நூல்களிலுள்ள அரிய கருத்துக்களும், இறைவனைப்பற்றிக் கூறு வதோடு அவனுடைய அரிய ஞானத்தையும் பாடிப் பரப்புகின்றன.

எல்லாம் இறைவனே! நல்லதும் கடவுள். கெட்டதும் கடவுள். ஒவ்வொரு பொருளிலும் அவனைக்கண்டு பேரானந்தத்தில் ஆழ்ந்து அமைதி யைப் பெறுவாயாக.

இறைவன் இந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் நிறைந்து விளங்குகிறான். அவன் ஒரு பிச்சைக் காரனைப்போல் உலகில் நடமாடுகிறான். ஒரு நோயாளியைப்போல் நோயால் துன்புற்று வருந்து கிறான். கந்தைத் துணிகளை அணிந்து காட்டில் அலைந்து திரிகிறான். உன் கண்களை திறந்து அவனை எல்லாவற்றிலும் காண். அனைவருக்கும் தொண்டு செய். அனைவரையும் நேசி.

ஒவ்வொரு உருவத்திலும், ஒவ்வொரு எண்ணத்திலும், ஒவ்வொரு உணர்விலும், ஒவ்வொரு மன நிலையிலும், ஒவ்வொரு அசைவிலும் ஒவ்வொரு மனக்கிளர்ச்சியிலும் எல்லா இடங்களிலும் தெய்வீகத் தோற்றத்தை உணர். புலன்வழியாகக் காணும்போது ஜடப் பொருளாகவும், அறிவினால் காணும்போது மனமாகவும், உயிரினால் காணும்போது ஆன்மாவாகவும் இறைவன் காணப்படுகிறார்.

இறைவன் உனக்குள்ளே வாசம் செய்கிறார். அவர் உனக்குள்ளிருந்து அடக்கியாளும் அந்தர்யாமியாக விளங்கி, உன் வாழ்க்கையைப் பாதுகாத்து, அடக்கியாள்கிறார். அவர் உனக்குள் இருக்கிறார்; நீ அவருக்குள் இருக்கிறாய். அவர் உன்னிடம் நெருக்கமாக உள்ளார். அவர் அதிக தூரத்தில் இல்லை. ஆனால் அவர் உன்னைவிட நெருக்கமாக உன்னருகில் இருக்கிறார். ஆரம்பத்தில் கைலாயம், இராமேசுவரம், மெக்கா, ஜெருசலம், வானம், விண்ணுலகம் ஆகிய இடங்களில்தான் இறைவனைக் காணலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தாய். உன்னிடம் தெளிவான எண்ணங்கள் இல்லை. இந்த உடல் இறைவனின் நடமாடும் கோயில். அவன் வாழும் கருவறை உன் இதயத்துள்ளிருக்கும் அறை. உன் கண்களை மூடிக்கொள். உன் இந்திரியங்களை உலகியற் பொருள்களில் இருந்து உள்ளே அடக்கிக்கொள். ஒன்றுபட்ட மனத்துடனும், பக்தியுடனும், தூய அன்புடனும் உன் உள்ளத்துக்குள்ளே அவனைத் தேடு. நீ அவனைக் காண்பது உறுதி. அவன் உனக்காகக் காத்திருக்கிறான். இரு கைகளையும் நீட்டி உன்னைத் தழுவக் காத்திருக்கிறான். நீ அங்கே அவனைக் காண முடியாவிட்டால், உன்னால் அவனை வேறெங்கும் காணமுடியாது.

இறைவனை எவ்வாறு உணர்ந்துகொள்வது?

தேவைக் கேற்றபடி கிடைக்கும் பொருள் போன்றவர் இறைவன். அவரைக்காண உண்மையில் நீ ஏங்குவாயானால், கணநேரத்தில் உனக்கு முன்னே தோன்றுவார்.

எந்தக்கலையோ, விஞ்ஞான அறிவோ, கல்வியோ, புலமையோ, இறையுணர்வு பெறுவதற்காகத் தேவையில்லை. நம்பிக்கை, தூய்மை, பக்தி ஆகியவைதான் தேவை.

உலகியல் பொருள்களான மனைவி, மகன், செல்வம், உடைமைகள், உறவினர்கள், நண்பர்கள், ஆகியவைகள் மீது உனக்கிருக்கும் அன்பை ஒன்றாகத் திரட்டி அதை இறைவனிடம் செலுத்து. இந்தக் கணத்திலேயே நீ இறையுணர்வு பெறுவாய்.

இறைவனையும் சாத்தானையும் ஒரே சமயத்தில் வழிபடமுடியாது. ஆன்மீக இன்பத்தையும் புலனின்பத்தையும் ஒரே சமயத்தில் அடைந்து இன்புற முடியாது. ஒளியையும் இருளையும் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் காணமுடியுமா?

இறைவன் உன் உள்ளம் முழுவதையும் கேட்கிறார். இறைவனுக்கு யாவற்றையும் இழந்து நில். (தியாகம் செய்துவிடு) இறைவன் உன்னை ஏற்றுக்கொண்டு, வழிகாட்டுவார். அப்போதுதான் சரணாகதி முழுமை பெறுகிறது.

உன்னுடைய நலன்கள், வேட்கைகள், ஆசைகள் ஆகியவற்றை மறந்துவிடு. பரமாத்மாவின் பேரருளைப் பெற்று இன்புறுவாய்.

இறைவனோடு ஒன்றுபட விரும்பினால் உன் கீழான இயல்புகளைத் தியாகம் செய்துவிடு.

அகந்தையை அகற்றிவிடு, இறையருளால் நிரப்பப்படுவாய். உன்னையே அழித்துக்கொள். தெய்வீக வாழ்க்கையைக்கண்டு தெளிவு பெறுவாய்.